

# அருள்மிகு சகலகலாவல்லி மாலை

அருள்மிகு குமரகுருபர சுவாமிகள் அருளியது





அந்தி வண்ணன் அழகமை காசியை முந்துறக் கண்டு முனிவரர் மகிழ்ந்தது.



வெண்டா மரைமுதல் விழுமிய கவியால் தண்டா மரையாள் கலையெலாம் தந்தது.



தவராஜ சிங்கம் தவப்பெருந் சிங்கத்து அமர்ந்து அவைக்கேக அரசெதிர் கொண்டது



கங்கையும் யமுனையும் கரந்த வாணியும் மங்கையர்க் கிறைவியாக் கண்டு மகிழ்ந்து

வெண்தாமரைக்கு அன்றி நின்பதம் தாங்களன்
-வெள்ளையுள்ளம்
தண்தாமரைக்குத் தகாது கொலோ சகம் ஏழும்
-அளித்து,
உண்டான் உறங்க, ஒழித்தான்
பித்தாக,உண்டாக்கும் வண்ணம்
கண்டான் சுவைகொள் கரும்பே!
சகலகலாவல்லியே!



நாடும் சொற்சுவை பொருட்சுவை தோய்தர நாற்கவியும்
பாடும் பணியில் பணித்து அருள்வாய்! பங்கய ஆசனத்தில்
கூடும் பசும்பொற்கொடியே! கனதனக் குன்றும் ஐம்பால்
காடும் சுமக்கும் கரும்பே! சகலகலாவல்லியே!



அளிக்கும் செழுந்தமிழ்த் தெள் அமுது ஆர்ந்து உன் அருட்கடலில்
குளிக்கும் படிக்குஎன்று
கூடுங்கொலோ?உளம்கொண்டு தெள்ளித்
தெளிக்கும் பனுவல் புலவோர்
கவிமழைசிந்தக்கண்டு
களிக்கும் கலாபமயிலே! சகலகலாவல்லியே!



தூக்கும் பனுவல் துறை தோய்ந்த
கல்வியும்சொற்சுவைதோய்
வாக்கும் பெருகப் பணித்து அருள்வாய்! வடநூல்
கடலும்
தேக்கும் செழுந்தமிழ்ச் செல்வமும் தொண்டர்
செந்நாவில் நின்று
காக்கும் கருணைக் கடலே! சகலகலாவல்லியே!



பஞ்சுஅப்பு, இதம்தரும்,
செய்ய,பொற்பாதபங்கேருகம்என்
நெஞ்சத்தடத்து அலராதது என்னே? நெடுந்தாள்
கமலத்து
அஞ்சத்துவசம் உயர்ந்தோன் செந்நாவும் அகமும்
வெள்ளைக்
கஞ்சத்தவிசு ஒத்திருந்தாய்! சகலகலாவல்லியே!



பண்ணும் பரதமும் கல்வியும் தீஞ்சொல்
பனுவலும் யான்
எண்ணும் பொழுது எளிது எய்தநல்காய்!
எழுதா மறையும்
விண்ணும் புவியும் புனலும்
கனலும்வெங்காலும்,அன்பர்
கண்ணும் கருத்தும் நிறைந்தாய்!
சகலகலாவல்லியே!



பாட்டும் பொருளும் பொருளால் பொருந்தும்
பயனும் என்பால்
கூட்டும்படி உன்கடைக்கண்நல்காய்!
உளம்கொண்டு தொண்டர்
தீட்டும் கலைத்தமிழ்த் தீம்பால்
அமுதம்தெளிக்கும் வண்ணம்
காட்டும் வெள் ஓதிமப்பேடே!
சகல்கலாவல்லியே!



சொற்விற்பன்னமும், அவதானமும்,
கல்விசொல்லவல்ல
நல்வித்தையும் தந்து அடிமை கொள்வாய்!நளின
ஆசனம்சேர்
செல்விக்கு அரிது என்று ஒருகாலமும்
சிதையாமை நல்கும்
கல்விப் பெறுஞ்செல்வப்பேறே!
சகலகலாவல்லியே!



சொற்கும் பொருட்கும் உயிராம் மெய்ஞானத்தில் தோற்றம் என்ன
நிற்கின்ற நின்னை நினைப்பவர் யார்? நிலம்தோய் புழைக்கை
நற்குஞ்சரத்தின் பிடியோடு அரசன்னம்நாணநடை
கற்கும் பதாம்புயத்தாளே! சகலகலாவல்லியே!



மண்கண்ட, வெண்குடைக்கீழாக,
மேற்பட்டமன்னரும், என்
பண்கண்ட அளவில், பணியச்செய்வாய்!
படைப்போன் முதலாம்
விண்கண்ட தெய்வம் பல்கோடி
உண்டேனும்,விளம்பில் உன்போல்
கண்கண்ட தெய்வம் உளதோ?
சகலகலாவல்லியே!

